

ஆன்மிகம் என்பது ஒருவருடைய வாழ்வில் மூன்று கட்டங்களாகச் செயல்படுகின்றது. முதலாவது கட்டம் நம்பிக்கைகள், வழிபாடுகள், பயிற்சி முயற்சிகள் நிறைந்த ஒன்றாகும். ஆன்மிக உலகின் இரண்டாவது தளம் அறிவு பூர்வமானது. இரண்டாவது தளத்தில் நாம் நமது மன இயக்கத்தை அறிவு பூர்வமாகப் புரிந்து கொள்கிறோம். இரண்டாம் தளத்திலுள்ள நமது தெளிவு உறுதிப்பட்ட நிலையில் நாம் மூன்றாம் தளத்திற்கு வந்து விடுகிறோம். இந்த மூன்றாம் தளத்தில் நமது தெளிவு வேறு, வாழ்க்கை வேறு என்று எதுவும் கிடையாது. நமது வாழ்வே ஒரு உயிரோட்டமான பிரவாகமாக அமைந்திருக்கிறது."

- ஸ்ரீ பகவத்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா?
அல்லது பாதையை நண்பர்களுக்கு
அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www. pravaagam.org www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by

SRI SIDDHASH GRAPHICS, Salem.
Cell : 90926 46260, 86800 06868




### ஸ்ரீ பகவத் பவனில் டிசம்பரில் 2 நாள்

# ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞான முகாம் வருகின்ற **டிசம்பர் மாதத்தில்** சேலம், ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம்,
கொடம்பக்காடு, பெரியகவுண்டாபுரம்,
காரிப்பட்டி (Po.) சேலம் - 636 106.

நாள் : 30.12.2017 சனி முதல் 31.12.2017 ஞாயிறு வரை

நேரம் : சனி காலை 8.30 மணிமுதல்
ஞாயிறு மதியம் 3.00 மணிவரை

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள், வெள்ளிக்கிழமை மாலையே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். ஞான முகாமில் கலந்து கொள்ள கட்டணம் எதுவும் இல்லை.

**அனுமதி இலவசம்**

**நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.**

ஞான முகாமைத் தொடர்ந்து 1.1.2018 ஆங்கில புத்தாண்டு அன்று ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவுடன் தங்க ஆர்வமுள்ளவர்கள் தங்கிச் செல்லலாம். இதனை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அனைவரும் வருக! ஞானத்தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித் தனி இட வசதி உள்ளன.
- ஞான முகாமில் 70 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவிற்கு**

- கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை Dec Gnanamuhaam என்று Type செய்து SMS அனுப்ப வேண்டிய எண் : 99422 19065
- முன் பதிவிற்கு இறுதி நாள் 15.12.2017





# மூன்று நிலைகள்



- ஸ்ரீ பகவத்

“தெய்வங்கள் இருக்கிறார்களா? சித்தர்கள் இருக்கிறார்களா? இறைநம்பிக்கை, பக்தி வேண்டாமா?”

- இப்படியெல்லாம் பலரும் கேள்விகளை எழுப்புகின்றனர்.

அந்தத் தெருவிலுள்ளவர்கள் இரண்டு பிரிவாகப் பிரிந்து நின்று ஒருவரையொருவர் திட்டிக்கொண்டிருந்தனர்.

இந்த நிலை இன்னுங்கொஞ்ச நேரம் நீடிக்குமானால் அது அவர்களுக்குள் கைகலப்பை ஏற்படுத்திவிடும் என்பது நிச்சயம்.

இந்நிலையில் அப்படிச் சண்டையிட்டவர்களில் சிலர் வினோதமான ஒரு காட்சியைக் கண்டார்கள்.

யாரோ ஒருவர் அங்கே நின்று கொண்டிருந்த மின்கம்பம் ஒன்றில் தனது காதுகளை மாற்றி மாற்றி வைத்து எதையோ உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தார்.

அவர் தனது வேலையிலேயே கவனமாக இருந்தார். சண்டையிட்டுக் கொண்டிருக்கும் எவரையும் கண்டு கொள்வதாகத் தெரியவில்லை.

அப்படி எதைத்தான் அவர் அவ்வளவு தீவிரமாகக் கவனித்துக் கொண்டிருக்கிறார் என்பது எவருக்கும் புரியவில்லை.

சண்டையிட்டுக் கொண்டிருந்த கூட்டத்திலுள்ள ஒருவர் மட்டும் அந்த நபரிடம் சென்று, “மின் கம்பத்தில் அப்படி என்ன கேட்கிறீர்கள்?” என்று கேட்டார்.

ஆனால் அவர் எந்தப் பதிலும் சொல்லாமல் மின்கம்பத்தில் தனது இரண்டு காதுகளையும் மாற்றி மாற்றி வைத்துக் கேட்பதிலேயே தீவிரம் காட்டி வந்தார்.

அவரைக் கேள்வி கேட்டுப் பயனில்லை என்று முடிவு செய்த இவர் அவரைப் போலவே அந்த மின் கம்பத்தில தனது காதுகளை மாற்றி மாற்றி வைத்து ஏதாவது கேட்கிறதா என முயன்று பார்த்தார். எதுவுமே கேட்கவில்லை.

பிறகு இவர் அவரிடமே கேட்டார். “உங்களைப்போல் நானுந்தான் காதுகளை வைத்துப் பார்த்துவிட்டேன் எதுவுமே கேட்கவில்லை. உங்களுக்கு மட்டும் என்னதான் கேட்கிறது?”

இப்போது அவர் இவரை மேலுங் கீழும் விசித்திரமாகப் பார்த்து விட்டுக் கேட்டார். “இரண்டு மணி நேரமாகக் காதுகளை வைத்துக் கேட்ட எனக்கே எதுவும் கேட்கவில்லை. பிறகு இப்போது வந்த உங்களுக்கு எப்படி அய்யா கேட்கும்?”

இந்த நிலையில் அவர்களைச் சுற்றிக் கூட்டம் கூட ஆரம்பித்துவிட்டது. சண்டையிட்டவர்களின் கவனம் திசைமாறிவிட்டதால் அவர்களுடைய சண்டை கைகலப்பாக மாறாமல் அத்துடன் முடிவடைந்துவிட்டது.

இப்படி நமது உலகியல் வாழ்வு என்பது போட்டி, பொறாமை, சண்டை சச்சரவுகள் நிறைந்த ஒன்றாகும். அமைதியான வேலை என்று எந்த வேலையும் கிடையாது.

ஒவ்வொருவருடைய வேலைகளிலும் ஓராயிரம் பிரச்சினைகள் இருக்கும். அவற்றின் தாக்கம் நமது மனதில்தான் எதிர்ச்செயலாக வெளிப்படுகின்றன.

நம்முடைய பிரச்சினைகளின் விளைவாக நமக்கேற்பட்ட மனக் கொந்தளிப்புகளிலிருந்து விடுபடுவது எவ்வாறு?

அடுத்தவர்களிடம் சண்டையிட்டு நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமா?

அப்படி நம்மைக் காப்பாற்ற முடியாமல் மன வேதனை எற்பட்டால் அதிலிருந்து விடுபட மது வகைகளை அருந்த வேண்டுமா?

மனிதரை மனிதராக வாழக் கற்றுக்கொடுப்பதற்காக அமைக்கப்பட்டதுதான் ஆன்மிகம். ஆன்மிக அணுகு முறையினால் மட்டுமே ஒருவரால் சரியான வாழ்வை வாழ முடியும்.

இந்த ஆன்மிகம் என்பது ஒருவருடைய வாழ்வில் மூன்று கட்டங்களாகச் செயல்படுகின்றது.

ஆன்மிகத்தின் முதலாவது கட்டம் நம்பிக்கைகள், வழிபாடுகள், பயிற்சி முயற்சிகள் நிறைந்த ஒன்றாகும்.

இதுதான் ஆன்மிகத்தின் ஆரம்பக் கட்டமாகும். இறைவன், இறை நம்பிக்கை, வழிபாடுகள்

அனைத்தும் இங்கே தேவைப்படுகின்றன.

நமது நம்பிக்கைகளை ஊக்குவிக்கும் பல சம்பவங்களும், அனுபவங்களும் இங்கு ஏற்படுகின்றன.

இவையெல்லாம் பொய்யானவையா? உண்மையற்றவையா? தேவை இல்லாதவையா?

அனைத்தும் உண்மையானவையே. அனைத்தும் தேவையானவையே. இதில் எந்தச் சந்தேகமும் தேவையில்லை.

அதில் நாம் காட்டும் பிடிவாதம் மட்டும்தான் தேவையற்றது. பக்திமார்க்கம், யோகதியான மார்க்கங்களை நாம் நமது தேவைக்கு பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை. அதனால் நமக்கு முன்னேற்றமே கிடைக்கின்றது.

அதன் மூலம் நாம் ஆன்மிகத்தின் இரண்டாவது நிலைக்கு எளிதாகச் சென்றுவிடலாம்.

சமீபத்தில் அன்பர் ஒருவர் வீடியோ சொற்பொழிவொன்றை அனுப்பிவைத்திருந்தார். அவர் இந்து மதமே கிறிஸ்தவ மதத்திலிருந்து வந்ததாகக் கூறி ஆதாரங்களை அடுக்கிக் கொண்டே சென்றார்.

இதுபோல் இந்து மதத்திலுள்ள சிலர் ஏசுகிறிஸ்து இந்து சாமியார்களிடம் தான் ஞானத்தைக் கற்றுக் கொண்டார் என்று கூறுவதையும் கேட்டிருக்கிறேன்.

நான் பள்ளிக்கூடம் படிக்கும் காலத்தில் ஐந்தாம் வகுப்பு வரை எழுதுவதற்கு சிலேட் எனும் ஒன்றையும், அதில் எழுதுவதற்கு பலப்பம் என்னும் குச்சியையும் பயன்படுத்துவோம். நாங்கள் சிலேட்டில் எழுதவேண்டியதையெல்லாம் அந்தக் குச்சியை வைத்துதான் எழுதுவோம்.

பள்ளிக்கூடத்தின் பாடநேரம் முடிந்ததும் மாணவர்களில் பலர் அந்தக் குச்சிகளை வைத்து விளையாட ஆரம்பித்து விடுவார்கள்.

ஒவ்வொருவரும் வரிசைப்படி அவரவர் குச்சியை ஒரு சாய்தளத்தில் உருட்டி விட வேண்டும். உருண்டு ஓடும் நமது குச்சி ஏதாவது ஓரிடத்தில் அடுத்தவர் குச்சியைத் தொட்டதென்றால் அடுத்தவருடைய அந்தக் குச்சியும் நமக்குச் சொந்தமாகிவிடும்.

குச்சியினுடைய நோக்கம் சிலேட்டில் எழுதுவது, மட்டுந்தான். ஆனால் அதை வைத்து விளையாடுவது என்பது எழுதுவதற்கு எந்த வகையிலும் பயனற்றது.

மதரீதியான நம்பிக்கைகளையும் கருத்துகளையும் எடுத்துக் கூறி விவாதம் செய்வதென்பது எழுதுவதற்காக உருவாக்கப்பட்ட குச்சியை, சூதாட்டம் போன்ற விளையாட்டுக்குப் பயன்படுத்துவதைப் போன்றதுதான்.

ஆன்மிகத்தின் நோக்கமே ஞானத்தையும், முக்தியையும் அடைவதுதான்.

பக்தி மற்றும் தியான முயற்சிகளை நாம் அவற்றை நோக்கிதான் பயன்படுத்த வேண்டும். அப்படி நாம் பயன்படுத்தாவிட்டால் போட்டி பொறாமைகளிலிருந்து நம்மை விடுவிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட அதே ஆன்மிகம் போட்டி பொறாமைகளை ஊக்குவிப்பதற்கே பயன்பட்டுவிடும்.

இப்படிதான் தியான அமைப்புகளைச் சேர்ந்த சிலர் தங்கள் அணுகுமுறைதான் உயர்ந்தது எனப் பிடிவாதம் செய்து வருவதைக் கூடப் பார்க்கிறோம்.

இயற்கைக்குத் திரும்புவதற்காகத்தான் செயற்கையான இந்தத் தியான பயிற்சிகளில் ஈடுபட்டு வருகிறோம். தியானங்களின் நோக்கமும் தியானங்களிலிருந்து விடுபடுவதுதான். எனது தியானம் உயர்ந்தது. உனது தியானம் தாழ்ந்தது என்ற கருத்துக்கள் நம்மைக் கீழ்நிலைக்கே தள்ளி விட்டு விடுகின்றன.

அனைத்து மதங்களும், அனைத்து வழிபாட்டு முறைகளும், அனைத்து யோக-தியானப்பயிற்சிகளும் உயர்ந்தவையே, தேவையானவையே.

ஆனால் இவை அனைத்தும் ஆன்மிக உலகின் ஆரம்பநிலையாக மட்டுமே இருக்கின்றன என்பதையும் நாம் புரிந்து கொள்ளவேண்டும்.

ஆன்மிக உலகின் இரண்டாவது தளம் அறிவு பூர்வமானது.

இந்த இரண்டாவது தளத்தில் நாம் நமது மன இயக்கத்தை அறிவு பூர்வமாகப் புரிந்து கொள்ளவேண்டும்.

முதலாவது தளத்தில் நாம் என்னவெல்லாம் செய்துவந்தோமோ அவற்றையெல்லாம் அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

பக்தியின் இலக்கு சரணாகதி. நமது பொறுப்புகளையெல்லாம் இறைவனிடம் ஒப்படைப்பதுதான் சரணாகதி. பொறுப்புகளை இறைவனிடம் ஒப்படைப்பது என்றால், நாம் எந்தப் பொறுப்புகளையும் எடுத்துக் கொள்ளாமல் இருப்பது என்று பொருள்.

எந்தப் பொறுப்பையும் எடுத்துக் கொள்ளாமலிருப்பது என்றால் என்ன?

நாம் ஓர் அலுவலகத்தில் வேலை பார்த்து வருவதாக வைத்துக் கொள்வோம்.

எல்லாப் பொறுப்புக்களையும் இங்கு இறைவனிடம் விட்டு விடுவது என்றால் என்ன?

அலுவலகத்தை நிர்வாகம் செய்யும் வேலையை இறைவனிடம் விட்டுவிட்டு வீட்டிலேயே அமர்ந்து கொள்வதா?

நமது செயல்கள் அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைத்து விடுவதா?

நாம் எந்தச் செயல்களில் ஈடுபட்டாலும் அவற்றோடு தொடர்புடைய மன அனுபவங்களும் நமது மனதின் செயல்களாக ஏற்பட்டுக்

கொண்டேதான் இருக்கும்.

இந்த மன அனுபவங்கள் அனைத்தும் தாமாகவே ஏற்படுகின்றன. தாமாக ஏற்படும் இந்த அனுபவங்களை நாம் உருவாக்கவில்லை. அவை சந்பந்தமாக நமக்கு எந்தப் பொறுப்பும் கிடையாது.

நம்மை மீறி நடக்கும் இவற்றை இறைவன் பொறுப்பில்தான் விட முடியும். நமது கட்டுப்பாட்டில் எடுக்க முடியாது.

சரணாகதி என்பது, நமது மன இயக்கத்தை இறைவனிடம் ஒப்படைப்பதையே குறிக்கிறது,

இந்த இரண்டாவது தளத்தில் நாம் நமது மன அனுபவங்கள் அனைத்தையும் நமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வராமல் சுதந்திரமாக விட்டு விடுகிறோம்.

யோக சாதனைகள் பழகுபவர்களும் முதல் தளத்திலேயே இருக்கிறார்கள்.

சாதனைகள் பல செய்து நல்லவிதமான மன அனுபவங்களை ஏற்படுத்துவார்கள்.

இதன் மூலம் அவர்கள் உலகப் பிரச்சினைகளிலிருந்தும், போட்டி பொறாமைகளிலிருந்தும் விடுபட்டிருப்பார்கள்.

அவர்களும் ஒரு கட்டத்தில் அவர்களது யோக சாதனைகளினால் உருவாக்கப்பட்ட மன அனுபவங்களும் , சக்திகளும் பயனற்றவை என்பதைக் கண்டு கொள்வார்கள்.

அந்த நிலையில்தான் அவர்களும் இரண்டாவது தளத்தினுள் அடியெடுத்து வைக்கிறார்கள்.

மனதின் அகநிலையைப் பொறுத்தவரையிலும் வினோதமான எந்த அனுபவங்களும் வினோதமான மனோ சக்கிகளும் இரண்டாம் பட்சமானவையே என்பதைக் கண்டு பிடிக்கும் வரை அவர்களால் இரண்டாம் தளத்தினுள் பிரவேசிக்க முடியாது.

இரண்டாம் தளத்தைப் பொறுத்த வரையிலும், மனதினுடைய இயற்கையான இயக்கமே உயர்ந்தது என்பதை அவர்கள் கண்டு பிடித்துவிடுவார்கள்.

சிலருக்கு இரண்டாம் தள சம்பந்தப்பட்ட தெளிவு கிடைத்தபிறகு கூட அவர்கள் முதல்தள அனுபவங்கள் மீது ஆர்வம் காட்டவும் நேர்ந்திடலாம். அதில் எந்தத் தவறும் கிடையாது.

அவர்களும் கூட ஒரு கால கட்டத்தில் இரண்டாம் தளத்தை முழுமையாக ஏற்றுக்கொள்ளும் தீர்க்கமான தெளிவைப் பெற்றுவிடுவார்கள்.

உண்மையில் இந்த இரண்டாம் தளம் என்பது முதல் தளத்துக்கு எதிரானதல்ல. இது உண்மையில் முதல் தளத்தினுடைய அறிவியல் பூர்வமான உண்மையான தெளிவு மட்டுமே.

நான் திருவண்ணாமலையில் குடும்பத்தோடு தங்கியிருந்தபோது அம்மையார் ஒருவர் எங்கள் இல்லத்துக்கு வந்து செல்வதுண்டு.

வெளியூரிலிருந்து வந்திருந்த அவர் ஒருநாள் இரவு நேரத்தில் கிரிவலம் செல்வதாகக் கூறிச்சென்றார்.

அருணாச்சலேஸ்வரர் அவருக்கு கிரிவலத்தின்போது சோதனை எதையாவது கொடுத்தால்தான் இப்படி இளம்பெண்ணான அவர் இரவில் தனியே கிரிவலம் போவதைக் கைவிடுவார் என எண்ணிகொண்டேன்.

இரவு பத்துமணி சுமாருக்கு அவரிடமிருந்து போன் வந்தது. “திரும்பி வரும் வழியில் நாய்கள் என்னை வழி மறித்துக் கொண்டு விட்டன” என்று கூறினார்.

நான் நினைத்தது போலவே நடத்துவிட்டதாக எண்ணிக் கொண்டேன்.

“எங்கே இருக்கிறீர்கள்” என்று கேட்டேன்.

"கிரிவலம் முடித்துவிட்டுத் திரும்பிவிட்டேன். உங்கள் வீடு இருக்கும் தெருவுக்கே வந்துவிட்டேன். அங்குதான் தெருநாய்கள் என்னை உங்கள் வீட்டுக்கு வரவிடாமல் மறித்துக்கொண்டுவிட்டன" என்று கூறினார்.

நான் தெருவுக்குசென்று அவரைக் கூட்டி வந்தேன்.

பக்தி உள்ளவர்களுக்கான பாதுகாப்புகளை அவர்கள் வணங்கும் தெய்வங்கள் வழங்கத்தான் செய்கின்றன.

அதனால் இரண்டாம் தளத்துக்கு வந்தவர்கள் கூட அவர்களுடைய தெளிவில் உறுதி பெறும் வரை முதல் தளத்துக்குச் சென்று வருவதில் கூட தவறு எதுவும் கிடையாது.

இரண்டாம் தளத்திலுள்ள நமது தெளிவு உறுதிப்பட்ட நிலையில் நாம் மூன்றாம் தளத்துக்கு வந்து விடுகிறோம்.

இந்த மூன்றாம் தளத்தில், நமது தெளிவு வேறு, வாழ்க்கை வேறு என்று எதுவும் கிடையாது.

நமது தெளிவே நமது வாழ்வாக இங்கு இருக்கிறது.

இங்கு எதைநோக்கியும் எந்தப் பயிற்சி முயற்சிகளும் கிடையாது.

நமது வாழ்வே ஒரு உயிரோட்டமான பிரவாகமாக அமைந்திருக்கிறது.

நீந்துவதற்குக் கற்றுக் கொண்ட உங்களால் அதை மறந்து அதிலிருந்து வெளிவர முடியாது.

தெரிந்துகொண்டால் அது தெரிந்து கொண்டதுதான். எந்த நூலையும் புரட்டிப் பார்த்து அதை நினைவுபடுத்தத் தேவையில்லை.

இந்த மூன்றாம் தளத்தில், நாம் நமது அகமாக உள்ள மன இயக்கத்தை முழுச் சுதந்திரத்தோடு இயங்கவிட்டுவிடுகிறோம்.

புறச் செயல்களுக்கு மட்டும் பொறுப்பை எடுத்துக் கொள்கிறோம்.





# கேள்வி? பதில்...

## நமது இன்பத்திற்கும் துன்பத்திற்கும் அகம் காரணமா? புறம் காரணமா?



**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

**கேள்வி :**

நமக்கு ஏற்படும் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் புறம் காரணம் இல்லையா? நம்முடைய மனதிலிருந்துதான் வெளிப்படுவதாக கூறுகிறார்கள். ஆனால் நடைமுறை வாழ்க்கையில் நாம் விரும்பும் புறப்பொருளில் இருந்தும் நபர்களிடம் இருந்தும் தானே இன்பமும் துன்பமும் ஏற்படுவதாக தோன்றுகிறது. இப்படி இருக்கையில் எப்படி நமது மனதில் தான் இன்பமும் துன்பமும் ஏற்படுகிறது என்பதை விளங்கிகொள்வது? நமக்கு ஏற்படும் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக பாவித்து விடுதலையுடன் வாழ்வது எப்படி?

**பதில் :**

ஒரு கதையின் மூலம் மேற்கூறிய கேள்விக்கு விடையை காண்போம்.

ஒரு நாய் உணவைத்தேடி அலைந்து கடைசியாக ஒரு காய்ந்து போன பெரிய எலும்பு துண்டை தூக்கி வந்தது. அந்த எலும்புத் துண்டை ருசிக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் தன்னுடைய கூர்மையான பற்களால் கடித்தது. ஆனால் எலும்பு மிகவும் காய்ந்து போய் இருந்தது. நாயும் தன்னுடைய கடுமையான முயற்சியால் பற்களை கொண்டு எலும்பின் எல்லா பகுதிகளையும் விடாமல் கடித்தது.

அந்த காய்ந்து போன பெரிய எலும்பு நாயின் கடைவாய் பகுதியை கொஞ்சம் குத்தி கிழத்தது. நாயின் கடைவாயின் கிழிந்த பகுதியிலிருந்து வழிந்துவரும் இரத்தத்தை சுவைத்தது. நாய் எலும்பு துண்டிலிருந்து சுவை கிடைப்பதாக எண்ணிக்கொண்டு மேலும் கடிக்க துவங்கியது. ஆனால் உண்மையில் நாயின் கடைவாய் பகுதியிலிருந்து வரும் இரத்தத்தை எலும்பிலிருந்து சுவை கிடைப்பதாக எண்ணிக்கொண்டது. வாய் வலித்தாங்க முடியாமல் போய் ஒரு கட்டத்திற்கு மேல் எலும்பை கீழே போட்டது. மிகவும் சோர்ந்து போனது நாய்.

இந்த கதையில் வரும் நாய்தான் நம்முடைய மனம் ஆகும். எலும்பு துண்டுதான் புறப்பொருளும் புறநபர்களும் ஆகும். எலும்புத் துண்டில் இருந்து சுவை கிடைப்பதாக நாய் எண்ணிக்கொண்டு தன்னுடைய கடைவாயின் கிழிந்த பகுதியில் இருந்து வரும் இரத்தத்தை சுவைத்துக் கொண்டு இருப்பதை போல் நாமும் புறப்பொருளிலிருந்து இன்பம் கிடைப்பதாக எண்ணிக்கொண்டு நம்முடைய சக்தியை செலவு செய்து இன்பமாகவும் துன்பமாகவும் உணர்கிறோம்.

உண்மையில் புறப்பொருளில்தான் இன்பம் என்றால், நமக்கு மிகவும் பிடித்த இனிப்பான ஜாமுனை சாப்பிடுவதாக எடுத்துக்கொள்வோம். முதல் ஜாமுனை நாக்கு ருசிக்கும்போது மிகவும் சுவையாக இருக்கிறது. இரண்டாவது ஜாமுனை சுவைக்கும் போது முதலாவதை காட்டிலும் சுவை சற்று குறைவாக தோன்றுகிறது. மூன்றாவது ஜாமுனை சுவைக்கும் போது போதும் என்ற உணர்வு ஏற்படுகிறது. நான்காவது ஜாமுன் நிச்சயமாக நமக்கு வேண்டாம் என்ற நிலைக்கு நாம் வந்து விடுகிறோம்.

உண்மையில் ஜாமுனில்தான் இன்பச்சுவை இருக்கிறது என்றால் எத்தனை ஜாமுனை சுவைத்தாலும் இன்பம் கூடிக்கொண்டேதானே போக வேண்டும்? ஆனால் நம்முடைய நடைமுறையில் ஜாமுனின் எண்ணிக்கை கூடக் கூட இன்பச் சுவையின் அளவு எப்படி குறைந்து போக முடியும்? முதல் ஜாமுனில் இருந்த இனிப்பு சுவை நான்காவது ஜாமுனில் எப்படி இல்லாமல் போகும்? ஒரே நேரத்தில் ஒரே மாதிரி செய்தவைதானே அத்துனை ஜாமுன்களும். இனிப்பு சுவையை தூண்டுவதற்கு ஜாமுன் ஏதோ ஓர் அளவிற்கு புற காரணமாக இருக்கலாம். ஆனால் உண்மையில் மிகவும் முக்கிய காரணியாக இருப்பது நமது நாக்கின் தன்மை மட்டுமே.

இதுபோல் வாழ்க்கையில் எத்தனையோ மகிழ்ச்சி அளிக்க கூடிய புறப்பொருளாக இருந்தாலும் கூட அந்த மகிழ்ச்சி அடுத்த அடுத்த நாட்களில் நீடிக்காமல் குறையவே செய்கிறது. புறப்பொருட்களில்தான் மகிழ்ச்சி என்றால் அந்த பொருள் நமக்கு கிடைத்த பின்பு மகிழ்ச்சி எப்படி குறைய முடியும்? மகிழ்ச்சி என்பது பொருளில் இல்லை அதில் இருப்பதாக எண்ணிக்கொண்டு பற்றி பிடிக்கும் நமது மன அனுபவத்தில்தான் உள்ளது.

புறப்பொருட்கள், புற நபர்களிடமிருந்து மகிழ்ச்சி ஏற்படவில்லை என்பதை நாம்

புரிந்துகொண்டோம். மனதில்தான் மகிழ்ச்சி ஏற்படுகிறது என்றால் நமக்கு மனதிலும் மகிழ்ச்சி தொடர்ந்து நீடிக்கவில்லையே அது ஏன்? நமக்கு பிடித்த பொருள் கிடைத்ததும் முதலில் மகிழ்ச்சி அடைந்த மனம் பின்பு ஏன் மகிழவில்லை. நமது மனதில் எந்த ஒன்றையும் நிரந்தரமாக பற்றி பிடிக்கவே முடியாது.

நமக்கு ஏற்படும் உணர்வுகளான இன்பம், துன்பம், கவலை, பயம், கோபம், காமம், வெறுப்பு, பொறாமை என எந்த உணர்வாக இருந்தாலும் அந்த உணர்வு நிரந்தரமாக மனதில் தங்கி இருக்கவே முடியாது. மனதில் அவை தோன்றுவதும் மறைவதுமாகதான் இருக்கும். மனதை பொறுத்த வரையில் அங்கு எந்த உணர்வும் நிரந்தரமாக நீடிப்பது இல்லை. எல்லா உணர்வுகளுமே தோன்றுவதும் மறைவதுமாக இருக்கிறது. இதுதான் மனதில் இயல்பு. இப்படி மனதில் தோன்றுவதையே நாம் அனுபவமாக உணர்கிறோம். ஓர் அனுபவம் என்றால் அதில் அனுபவம் என்ற ஒரு பகுதியும் அனுபவிப்பான் என்ற மற்றொரு பகுதியும் சேர்ந்தேதான் இருக்கும். ஒவ்வொரு அனுபவமும் மனதில் அனுபவமாகவும் அதனைத்தொடர்ந்து அனுபவவிப்பனாக மாறிக்கொண்டேதான் இருக்கிறது. இந்த இரண்டு பகுதியில் அனுபவம் என்பது நிகழ்வையும் அனுபவிப்பான் என்பது **'நான்'** என்ற தன்மையையும் குறிக்கிறது.

அனுபவத்தின் ஒரு பகுதியான அனுபவிப்பான் தன்னுடைய கட்டுப்பாட்டுக்குள் அனுபவத்தை கொண்டுவர வேண்டும் என்று முயல்வதுதான் அத்தனை பிரச்சினைகளுக்கும் மூல காரணம். புறப்பொருளில்தான் இன்பம் கிடைப்பதாக எண்ணிக்கொண்டிருக்கும் அனுபவிப்பானின் பிடிவாதமே ஒட்டுமொத்த பிரச்சினைக்கும் காரணம். இன்பம் புறப்பொருட்களில் இல்லை என புரிந்து கொண்ட நிலையில் ஒரு அனுபவத்தின் இரண்டு பகுதிகளும் முக்கியத்துவம் இழந்து அனுபவமும் அனுபவிப்பவனும் தோன்றி மறையும் பிரவாகத் தன்மைக்கு வந்து விடுகிறது.

ஸ்ரீ பகவத் அய்யா கூறும் ஓர் உதாரணத்தின் மூலம் இதனை புரிந்து கொள்வோம்.

ஓர் ஆப்பிள் பழம் வெட்டப்படாமல் முழுமையாக இருந்தால் அதை எளிமையாக எங்கு வேண்டுமானாலும் உருட்டிவிடலாம். அந்த பழத்தை சரி பாதியாக வெட்டி விடுவதாக எடுத்துக்கொள்வோம். இரண்டு துண்டுகளாக வெட்டிய ஆப்பிள் பழத்தை உருண்டு ஓட செய்ய முடியுமா? நிச்சமாக பழத்தை இரண்டாக வெட்டிய பிறகு உருண்டு ஓட செய்ய முடியாது. ஆப்பிள் பழம் வெட்டாமல் முழுமையாக இருந்தால் தான் உருண்டு ஓட செய்ய முடியும்.

இந்த உதாரணத்தில் இருந்து நாம் என்ன தெரிந்து கொள்கிறோம். ஆப்பிள் பழம் என்பது ஓர் அனுபவம். வெட்டப்பட்ட ஆப்பிள் பழத்தின் இரண்டு பகுதிகள் தான் அனுபவம், அனுபவிப்பான் அகும். அனுபவம், அனுபவிப்பான் சேர்ந்தே ஆப்பிள் பழமாக காட்சி அளிக்கிறது. ஆப்பிள் இரண்டு துண்டுகளாக வெட்டிய பிறகு அனுபவம் ஒரு பகுதியாகவும் அனுபவிப்பான் மற்றொரு பகுதியாகவும் மாறிவிடுகிறது. இந்த இரண்டு பகுதியில் அனுபவம் என்பது நிகழ்வையும் அனுபவிப்பான் என்பது அனுபவத்தை உணர்ந்த நானாகவும் இருக்கிறது.

அனுபவத்தில் ஒரு பகுதியான அனுபவிப்பான் தன்னுடைய கட்டுப்பாட்டுக்குள் அனுபவத்தை கொண்டு வந்து, தனக்கு வேண்டும் என்ற போது அந்த அனுபவத்தை பிடிவாதமாக பற்றி பிடிக்க முயற்சி செய்வதால் தான் அத்தனை பிரச்சினைகளும் ஏற்படுகிறது. அனுபவிப்பான் அனுபவத்தை நிரந்தரமாக பற்றி பிடிப்பதால்தான் ஒரே அனுபவம் நீடிப்பதுபோல் தோன்றுகிறது.

அனுபவிப்பனாகிய **"நான்"** என்பதும் அனுபவித்தின் ஒரு பகுதி என்பதை புரிந்து கொள்ள வேண்டும். அனுபவிப்பான் தானும் அனுபவத்தின் ஒரு பகுதிதான் என்று புரிந்துகொள்ளும் போது அனுபவத்தின் மீதான பிடியில் இருந்து அனுபவிப்பான் விடுபடுகிறான். இங்கு பிளவு பட்ட மனதின் இரட்டை தன்மை. பிளவு படாத முழுமை தன்மைக்கு வந்துவிடுகிறது. அனுபவிப்பான் தனது இயலாமையை புரிந்துகொண்டு அனுபவத்துடன் சேர்ந்து பிரவாகிக்க தொடங்கி விடுகிறான். ஆப்பிள் பழம் உருண்டோடுவது போல் எல்லா அனுபவங்களும் உருண்டோடும் தன்மைக்கு வந்து விடுகிறது.

நம்முடைய ஒட்டு மொத்த மனோ இயக்கமும் விடுதலையுற்று ஓடிகொண்ருக்கும் ஆற்றின் இயல்பான ஓட்டமாகவே மாறிவிடுகிறது.

## ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் மதுரை வருகை

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஒவ்வொரு மாதத்திலும் இறுதி பத்து நாட்கள் மதுரை, திருப்பரங்குன்றம், லைன் சிட்டி நகரில் உள்ள தனது இல்லத்தில் தங்கி இருப்பார்கள். அது சமயம் ஐயாவை சந்திக்க விரும்புபவர்கள் முன் அனுமதி பெற்று ஐயாவை நேரில் சந்திக்கலாம்.

முன் அனுமதிக்கு : **99442 15677, 97891 65555, 99942 05880**

## புதிய நூல்

களமிறங்க மறுத்து காண்டீப வில்லைக்
கைவிட்ட அர்ஜுனனைக் களமிறங்கக் கூறி
ஸ்ரீ கிருஷ்ணர் உபதேசித்தது அன்றைய
ஸ்ரீமத் பகவத் கீதை.

களமிறங்க மறுத்து அதி நவீன ஆயுதங்களைக்
குவித்துப் போட்டிருக்கும் இன்றைய
இராணுவத்தைக் களமிறங்க உபதேசிக்கப்
பட்டதுதான் இந்த ஸ்ரீ பகவத் பாதை!!!

- ஸ்ரீ பகவத்




## ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் புதிய நூல்

# "ஸ்ரீ பகவத் பாதை"

இப்புதிய நூல் டிசம்பரில் வெளிவர உள்ளது. விடுதலைக்காகப் பல நூல்களை எழுதிய ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் புற ஒழுங்குக்காகவும் சமுதாய நலனுக்காகவும் எழுதிய நூல் தான் **ஸ்ரீ பகவத் பாதை** எனும் இந்தப் புதிய நூல்.

சமுதாய அவலங்களைப் படம் பிடித்துக்காட்டும் இந்நூல். அவற்றுக்கான தீர்வையும் வழங்குகிறது. இந்தச் சமுதாயத்தில் பல அவலங்கள் நடந்து வருகின்றன. அநீதியாலும் அதிகார வர்க்கத்தாலும் பல வகையிலும் பாதிப்படைந்து வருகிறோம். ஆனால் அதற்கான எதிர்ப்பை தனிமனிதனாகக் காட்ட முடியாத சூழல்.

ஒரு சிலர் எதிர்ப்பைக் காட்டினாலும் அது வன்முறையில் சென்று முடிகிறது.

பிறகு எப்படித்தான் தீர்வு காண்பது?

நம்மால் என்னதான் செய்து விடமுடியும்?

இப்படி நமக்கு ஏற்படும் பாதிப்பையே, அந்த பாதிப்பினால் ஏற்படும் உந்து சக்தியாகப் பயன்படுத்தி நம்முடைய சமூக அமைப்பையே மாற்றியமைக்கும் சமுதாய மாற்றத்திற்கான தீர்வை வழங்குகிறது இந்நூல்.

சமுதாய நலனுக்காக வெளிவர இருக்கின்ற இந்நூலை குறைந்த விலையில் எல்லோருக்கும் கொண்டு சேர்க்க ரூபாய் 10000/- வழங்கும் இருபது நன்கொடையாளர்கள் தேவைப்படுகிறார்கள்.

இதுவரை நன்கொடை வழங்கி தங்களை இணைத்துக்கொண்டவர்கள் :

1. திரு. **குணாலன்,** கோவை
2. திரு. **கார்த்திகேயன்,** சிங்கப்பூர்
3. திரு. **ஜெயராம்,** கனடா
4. திரு. **சேகர்,** துபாய்
5. திரு. **தண்டபாணி,** சிங்கப்பூர்
6. திருமதி **முத்துலட்சுமி,** சென்னை,
7. திரு. **முருகவேல்,** சென்னை,
8. திரு. **சதானந்தம்,** திருச்செங்கோடு
9. திரு. Dr. **மணவாளன்,** சிதம்பரம்
10. திரு. **சீத்தல்குமார்**
11. இவர்களுடன் பெயர் தெரிவிக்க விரும்பாத சென்னையை சேர்ந்த ஓர் அன்பர்.
12. திரு. **சங்கர்,** மேட்டூர்

இந்நூல் வெளியிட இன்னும் 8 அன்பர்கள் தேவைப்படுகிறார்கள். எனவே ஆர்வமுள்ளவர்கள் இச்சமுதாயத் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம். **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத்தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம். வங்கிக்கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் : **HDFC Bank - Sri Bagavath Mission, A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/c** ல் நேரடியாக செலுத்தியவர்கள் **97891 65555** என்ற எண்ணிற்கு தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

அன்புடன்



Sri Bagavath Mission

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப்பயணியின் வணக்கம்.

சேலம், பெரியகவுண்டாபுரம், ஜருகுமலை அடிவாரத்தில அமைந்துள்ள நமது ஸ்ரீ பகவத் பவன் பகுதியில் நிலத்தடி நீர் பற்றாக் குறையால் நீர் தட்டுப்பாடு பல வருடங்களாக இருந்து வந்தது. பணிரண்டு ஆண்டுக்குப் பிறகு மீண்டும் தற்போது மழை பொய்யாமல் பெய்து மலைப் பகுதியையே சோலைவனமாக மாற்றியுள்ளது. காய்ந்துபோன ஜருகுமலை தற்போது பசுமை மலையாக காட்சியளிப்பதோடு புதிய நீர் ஊற்று ஊற்றெடுத்து நமது பகுதியில் நீர் ஓடையாக ஓட தொடங்கியுள்ளது. ஊற்றெடுத்து ஓடும் நீர் ஓடையின் ஓசை மனதிற்கு இதமளிக்கிறது.

இந்த பசுமை நிறைந்த மலைப்பகுதியில் காலையும் மாலையும் ஐயாவுடன் மலை ஏற்றத்தில் கலந்து கொண்டு நீர் ஊற்றை கண்டுகளிக்கும் வாய்ப்பு அக்டோபர் 14, 15 ஆம் தேதிகளில் ஞான முகாமில் கலந்து கொண்டவர்களுக்கு கிடைத்து மகிழ்வடைந்தனர்.

பிரதிபலன் கருதாமல் மற்றவர்களின் நலனுக்காக நாம் ஆற்றும் நிஷ்காமிய கார்மாவிற்கு இயற்கை வழங்கிய கொடையாகவே எண்ணி மகிழ்வோமாக.

இந்த ஞான முகாமைத் தொடர்ந்து அக்டோபர் மாத இறுதியில் மேலும் ஒர் ஞானமுகாம் 28, 29 ஆம் தேதிகளில் கரூர் **ஆர்த்தி கண் மருத்துவமனையில்** அமைந்துள்ள **திருக்குறள் சமுதாய மையத்தில்** இலவசமாக நடைபெற்றது. இது கரூர் மக்களுக்காக நடத்தப்பட்டது. இதில் நூற்றுக்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர். இந்த ஞான முகாமிற்கு இலவசமாக இடமளித்ததோடு மிகச்சிறந்த முறையில் ஏற்பாடு செய்திருந்தார் **கண் மருத்துவர் திரு. இமேஷ்** அவர்கள்.

இவருடன் இணைந்து ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்திவேலூர் மையத் தலைவர் திரு. **இராஜகோபால்,** திரு. **சிவகுரு,** திரு. **கோவி. இரவி** மற்றும் திரு. **ராமஜெயம்** ஆகியோர் திறம்பட செயலாற்றினார்கள். இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலும் இம்மாதத்தில் 11, 12 ஆம் தேதிகளில் சென்னை மைலாப்பூரில் அமைந்துள்ள சீனிவாச சாஸ்திரி அரங்கத்தில் இரண்டு நாள் ஞான முகாம் நடைபெற உள்ளது.

இதனைத் தொடர்ந்து கோவை நிஷ்டை இண்டர்நேசனல் லஃப் ஸ்டைல் ட்ரெயினிங் சென்டரில் 18, 19 ஆம் தேதியில் நடைபெறும் **ஹீலர் பாஸ்கர்** அவர்களின் "வாங்க பழகலாம்" என்ற இரண்டுநாள் முகாமில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சிறப்புரை வழங்க இருக்கிறார்கள். இதில் கலந்துகொள்ள ஆர்வமுள்ளவர்கள் அலைபேசி எண் : 8870666966 ல் முன்பதிவு செய்துகொள்ளலாம்.

மேலும் டிசம்பர் மாதத்தின் இறுதியில் 30, 31 ஆம் தேதிகளில் ஸ்ரீ பகவத் பவனில் இரண்டு நாள் ஞானமுகாம் நடைபெற உள்ளது.

ஞானத்தேடுதலில் இருப்பவர்கள் எந்த ஆன்மிக அமைப்பை சார்ந்தவர்களாக இருப்பினும் திறந்த மனத்துடன் நமது ஞானமுகாமில் கலந்து கொள்ளும்போது ஞானத்தெளிவு பெற்று விடுதலை அடைவது நிச்சயம்.

எனவே ஞானத்தேடுதல் உள்ள புதிய அன்பர்களுக்கு ஞானமுகாமை அறிமுகம் செய்து அவர்களும் கலந்துகொண்டு பயனடையச் செய்யுமாறு அனைவரையும் அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

# ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அருட்கருணையினாலும் அவரால் ஞானத் தெளிவு பெற்ற நம் எல்லோருடைய ஒட்டுமொத்த பிரார்த்தனையாலும் நமது பகவத் பவனை சுற்றியுள்ள மலைப்பகுதியில் கன மழையை வாரி இரைத்திருக்கிறது இயற்கை.

இது நம் அனைவரின் கண்களுக்கு குளிர்ச்சி அளிப்பதாகவும் மன நிறைவை தருவதாகவும் அமைந்துள்ளது. மேலும் நமது ஸ்ரீபகவத் பவனின் செயல்பாடுகள் மிகச்சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஐயாவை சந்தித்து உரையாடி தெளிவு பெற பலரும் வந்த வண்ணம் உள்ளனர். வருபவர்கள் தங்குவதற்கான வசதியும் அவர்களுக்கான உணவும் சிறந்த முறையில் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. மேலும் ஒவ்வொரு மாதமும் ஞான முகாம் கட்டணமின்றி இலவசமாக நடந்து வருகிறது. ஸ்ரீ பகவத் மிஷனுக்கு வரும் நன்கொடைகளையும் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களின் பங்களிப்பையும் கொண்டு மட்டுமே அனைத்து செலவுகளையும் எதிர் கொண்டு வருகிறோம்.

அந்த வகையில் ரூபாய் 25,000/- வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனராக தன்னை இணைத்துக்கொண்ட திரு. **தீபக்,** சென்னை அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பகவத் ஐயாவின் கருத்துகளை புரிந்து கொண்டவர்களும் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாகவும், புறவலர்களாகவும் இணைந்து ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இப்படிக்கு




# ஸ்ரீ பகவத் பவன் – புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணைவீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று புரவலர்களாக இணைந்தவர்கள் :

1. திரு. **சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
2. திரு. **விரன்சுப்பு** (எ) **இராஜேஷ்.** புதுக்கோட்டை.
3. திரு. **கணேஷ்,** கோவை
4. திருமதி **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை
5. திரு. **இரகு,** கிருஷ்ணகிரி
6. திரு. **அஃகு ஹீலர் உமர் ஃபாரூக்,** கம்பம்
7. திரு. **சேகர்,** கத்தார்
8. திரு. **குணாலன்,** கோவை
9. திரு. **சம்பத்,** சென்னை
10. திரு. **வெங்கட்ராமன்,** சென்னை
11. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்
12. திரு. **பாலசுப்ரமணி,** பரமத்திவேலூர்
13. திரு. **பாரதிராஜா,** பரமத்திவேலூர்
14. திரு. **பாபுலால்,** பெங்களூர்
15. திரு. **முரளி,** சென்னை
16. திரு. **வீரப்பன்,** நெல்லை
17. திரு. **அருணாச்சாலம்,** நெல்லை
18. திருமதி **நிருபமா ஸ்ரீநாத்,** சென்னை
19. திருமதி **வடிவம்மாள்,** சென்னை
20. திரு. **ஹீலர் சுரேஷ்,** சென்னை
21. திரு. **ஹரி கிருஷ்ணன்,** சென்னை
22. திரு. **ஸ்ரீபகவத்மிஷன்,** வெஸ்ட்மாம்பலம் சத்சங்கம்
23. திரு. **கார்த்திக்,** போரூர், சென்னை
24. திரு. **ஆனந்த் V. ராயன்,** திருச்செந்தூர்
25. திரு. **யுகேஷ்குமார்,** சென்னை
26. திரு. **P. சௌந்தரராஜன்,** சென்னை
27. திரு. **D. சந்திரசேகர்,** சென்னை
28. திரு. **நத்தகோபால் நாராயணன்** USA
29. திரு. **பாபு,** காட்பாடி, வேலூர்
30. திரு. **K. முருகானந்தன்,** திருப்பூர்
31. திரு. **P.R. குமார்,** எர்ணாகுளம்
32. திருமதி **மாலா மங்களேஸ்வரன்,** லண்டன்
33. திரு. **செந்தில் ஜெயபாலன்,** பெங்களூரு
34. திரு. **Javis Arul jeraid Arul Samy,** Dubai
35. திரு. **பாண்டிபரமசிவம்,** சென்னை
36. திரு. **T.M.K. தியாகராஜன்,** சென்னை
37. திரு. **A. ராஜமாணிக்கம்** (MRS Yarns) சேலம்
38. திரு. **இரவிச்சந்திரன்,** வெஸ்ட்மாம்பலம், சென்னை
39. திரு. **பாலமுருகன்,** USA
40. திருமதி **சுரபி,** டெல்லி
41. திரு. **முருகவேல்,** சென்னை
42. திரு. **சதானந்தம்,** திருச்செங்கோடு
43. திருமதி **சாந்தி,** கோவை

புரவலர்களாக தங்களை இணைத்துக்கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-**ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் அய்யா அவர்களுடன் அக்டோபர் ஞான முகாமில் கலந்து கொண்டவர்கள்

அண்ணாமலை பல்கலைக்கழகத்தின் உளவியல் துறையின் நூலகத்துக்கு ஸ்ரீ பகவத் அய்யாவின் அனைத்து நூல்கலையும் இலவசமாக நமது அன்பர் **செந்தில்வேலன்** அவர்கள் வழங்க அத்துறையின் முதல்வரும் பேராசிரியர் அவர்களும் பெற்றுக்கொள்கிறார்கள்.





அக்டோபர் ஞான முகாமில் **ஸ்ரீ பகவத்** அய்யா அவர்களுடன் சென்னை திரு. **கோபாலகிருஷ்ணன்**

அக்டோபர் ஞான முகாமில்



ஸ்ரீ பகவத் அய்யாவிடம் சென்னை திரு. **தீபக்** அவர்கள் ரூ.25000 வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனராக இருந்தபோது





திருச்சி **சரண்குமார்** அவர்கள் திருச்சி நகைச்சுவை மன்றத்தின் செயலாளர் திரு. **சிவகுருநாதன்** அவர்களிடம் 100 பகவத் பாதை வழங்கிய போது



கரூரில் நடந்த ஞான முகாமில்



கரூர் ஞான முகாமில்



அண்ணாமலை பல்கலைக்கழகத்தின் தத்துவத்துறை பேராசிரியர் Dr. R. **செல்வகுமார்** அவர்களுக்கு **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு நூலை** நமது அன்பர் **செந்தில் வேலவன்** அவர்கள் வழங்கிய போது

# ஜென் கதை

## அயராத விழிப்புநிலை

ஞானத் தேடலில் ஈடுபட்டு வந்த ஒருவன் தன்னுடைய இறுதி கண்டுபிடிப்பாக மனதை அயராத விழிப்பு நிலையில் வைத்திருப்பது ஒன்றே வாழ்க்கையில் எல்லா பிரச்சினைகளுக்கும் தீர்வு என்பதை உறுதியாக நம்பினான். அயராத விழிப்பு நிலையை அடைவதற்காக பல பயிற்சி முயற்சிகளை மேற்கொண்டான். அவனால் எவ்வளவு தான் முயன்றும் முழுமையான விழிப்புநிலையை அடையவே முடியவில்லை. எப்போதும் விழிப்புநிலையிலே இருக்க வேண்டும் என்ற உணர்வு மனப் போராட்டத்தை ஏற்படுத்தியது. விழிப்பு உணர்வை தவற விட்டுவிடுகிறோம் என்ற எண்ணமே குற்ற உணர்வை ஏற்படுத்தியது. தீர்வு தேடி ஓர் ஞானியை சந்தித்தான்.

தன்னுடைய உண்மை நிலையை அப்படியே ஞானியிடம் கூறி "எனக்கு ஏதாவது உதவி செய்யுங்கள்" என்று கண்ணீர் மல்கினான்.

ஞானி, "சரி பார்த்துக் கொள்ளலாம். இப்போது ஆற்றில் குளிக்க போகிறேன். நீயும் குளிக்க வாயேன்" என்றார்.

"சரி" என்று ஞானியுடன் ஆற்றில் குளிக்கச் சென்றான்.

வந்தவனிடம் ஆற்றின் ஆழமான பகுதியில் தோன்றும் நிர் சுழலைக் காட்டி "அது என்ன? எப்படி இருக்கும்? அதன் இயக்கம் என்ன?" என்றார் ஞானி.

"அது நீர்ச் சுழல், புனலைப் போல் தோற்றமளிக்கும் ஆற்றில் தண்ணீர் ஒரு குறிப்பிட்ட பகுதி தன்னை தானே வட்டமாக சுற்றிக் கொண்டு செல்வதை தான் சுழல் என்று கூறுகிறோம். நாம் இந்த சுழலில் சிக்கிக் கொண்டால் உயிர் பிழைப்பது மிகவும் கடினம்" என்றான்.

"நீ இந்த சுழலில் சிக்கிக் கொள்வதாக வைத்துக் கொள்வோம் என்ன செய்வாய்?" என்றார் ஞானி.

"சுழலிருந்து தப்பிப்பதற்கு என்னால் என்ன செய்ய முடியுமோ அனைத்தையும் செய்து சுழலிருந்து தப்பிக்க முயற்சி செய்வேன்" என்றான்.

"சுழலிருந்து உன்னை விடுவிக்க நீ எடுக்கும் அத்தனை முயற்சிகளும் உன்னை சூழலிலே தான் சிக்கவைக்கும்? இப்போது நீ என்ன செய்வாய்?" என்றார் ஞானி.

"அப்படியா? தெரியாது? என்ன செய்ய வேண்டும் சாமி?" எனக் கேட்டான். "சுழலில் சிக்கிக் கொண்ட நாம் எதுவும் செய்யாது அப்படியே சுழலை ஏற்றுக்கொள்ளும் போது சுழலே நம்மை வெகுவிரைவாக சுழலிருந்து விடுபட்டு சுழல் இல்லாத ஆற்றின் ஓட்டத்திற்கு நகர்த்தி விடும்" என்றார் ஞானி.

"சுழலில் சிக்கினால் அது நம்மை உள்ளே ஆழத்திற்கு தானே இழுத்துச்செல்லும் சுழலை ஏற்றுக்கொள்ளும் போது சுழலே நம்மை எப்படி விடுவிக்கும் புரியவில்லையே சாமி" என்றான்.

"சுழலின் மேல் பகுதியில் சுாற்சி வேகம் அதிகமாகவும் சுழலின் அடிப்பகுதிக்குச் செல்லச் செல்ல அதன் கூம்புப் பகுதியில் சுழற்சி வேகம் மிகவும் குறைந்தும் இருக்கும்...

"சுழலில் சிக்கிக் கொண்ட நம் முயற்சியை கைவிடும் போது சுழற்சியின் வேகமான மேல் பகுதியிலிருந்து சுழற்சி குறைந்த அடிப்பகுதிக்கு இழுக்கப்பட்டு, ஆற்றின் ஓட்டத்திற்கு சுழலே நம்மைத் தள்ளிவிடும். இது தெரியாமல் சுழலிருந்து விடுபட நாம் எடுக்கும் அத்தனை முயற்சிகளும் நம்மை சுழலிலேயே சிக்கவைத்து அதிலிருந்து விடுபட முடியாதபடி நம்முடைய ஒட்டுமொத்த சக்தியையும் உறுஞ்சிக்கொண்டு இறுதியாக நம் முயற்சியே நம்மை முடிந்து விடும். இது போல் தான் உன் பிரச்சினையும்" என்றார்.

"புரியவில்லையே சாமி" என்றான்.

"ஆற்றின் மொத்த ஓட்டத்தோடு பார்க்கும் போது சுழல் என்பது தற்காலிகமாக தோன்றி மறையும் ஆற்றின் தண்ணீர் தான் என்பது புரிந்துவிடும். எப்போதும் ஒடிக்கொண்டே இருப்பது தான் ஆறு. அந்த ஆற்றில் தோன்றித், தோன்றி மறைவது தான் சுழல் ஆகும். அது போல் தான் மனோலய நாசம் என்பது பிரவாகமாக ஆற்றை போல் ஓடிக்கொண்டே இருக்கும். அதில் விழிப்பு நிலை என்ற மனோலயம் சுழலைப் போல் தோன்றி மறைந்து கொண்டே இருக்கும்" என்றார் ஞானி.

"அப்படி என்றால் விழிப்பு நிலை என்பது அவசியமில்லையா?" என்றான்.

"நமது புறக் காரியத்தை செய்ய வேண்டிய சூழ்நிலையின் போது நமக்கு ஏற்படும் விழிப்புணர்வை பயன்படுத்தி செயல் செய்து கொள்ளலாம். மற்றபடி நமது மனதில் அயராத விழிப்பு நிலை இருக்க வேண்டும் என்பது எல்லாம் இயற்கையான ஆற்றின் ஓட்டத்திற்கு நாமே தடையாக இருப்பதே ஆகும்" என்றார் ஞானி.

"ஆறும், சுழலும் பார்ப்பதற்கு தனித்தனியாக தானே தெரிகிறது?" என்றான்.

"பார்ப்பதற்கு வேறு வேறாக தோற்றமளித்தாலும் சுழலும் கூட ஆற்றில் ஏற்படும் தற்காலிக சலனமே. சுழலும் ஆற்றின் ஒரு பகுதியே. பிரவாகத்தில் ஏற்படும் தற்காலிக சலனமே விழிப்புநிலை. விழிப்புநிலையும் விழிப்புநிலை தவறுவதும் கூட பிரவாகத்தின் ஒரு பகுதியே" என்றார் ஞானி. அயராத விழிப்புநிலையின் மீது இருந்த பிடி தளர்ந்தது. ஆற்றை போல் பிரவாகாக ஓட்ட மெடுத்தது. தீர்வை தேடி வந்தவனும் பிரவாக ஓட்டத்தில் கரைந்து காணாமல் போனான்.

Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555